

महिषासुरमर्दिनीस्तुतिः

தேவி மகாத்ம்யத்தில் தேவர்கள் செய்த

# மஹிஷாஸுரமர்த்தினி ஸ்துதி

டாக்டர்

வே. ராகவன்




# தேவீமஹாத்ம்யத்தில்

## தேவர்கள் செய்த

# மஹிஷாஸுரமர்த்தினீ ஸ்துதி






ஸாமதி ஸ்தோத்திர நூல்கள், 2

3-4

दिवीमाहात्म्ये देवैः कृता

# महिषासुरमर्दिनी स्तुतिः

தேவீமாஹாத்ம்யத்தில் தேவர்கள் செய்த

# மஹிஷாஸுரமர்த்தினீ ஸ்துதி

தேவநாகரி, தமிழ் லிபிகளில்

ஸம்ஸ்க்ருத மூலமும், தமிழ் உரையும்

டாக்டர் வே. ராகவன்

ஜோதி நிலையம்

சென்னை-18

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் ஸ்ரீ மடம்,
# காஞ்சீபுரம்

முகாம் திருமலை திருப்பதி ஸ்ரீ: தேதி 24—6—66

'ஜோதி ப்ரசுரம்' என்னும் தலைப்புடன் நூல்களை வெளியிடும் ஸ்ரீஜயராமன் ப்ராசீன மஹான்கள் அனுக்ரஹித்துள்ள ஸ்தோத்ரங்களை பல அறிஞர்களைக் கொண்டு எழுதப்படும் தமிழ் உரையுடன் வெளியிட முன்வந்திருப்பதையும் முதலில் ஸ்ரீபகவத்பாதாசார்யாள் ஒரு ஏழைப் பெண்மணிக்காக அருளியுள்ள லக்ஷ்மீஸ்தோத்ர ரூபமான கனகதாரா ஸ்தோத்ரத்தை சென்னை ஸர்வகலாசாலை ஸம்ஸ்கிருத பேராசிரியர் கவிகோகில ஸ்ரீ ராகவன் இயற்றியுள்ள தமிழ் உரையுடன் ப்ரசுரிக்க இருப்பதையும் அறிந்து ஸ்ரீமஹா ஸந்நிதானத்தில் ஸந்தோஷிக்கிறார்கள்.

ஸ்ரீஜயராமனின் இம்முயற்சி பக்தர்களின் ஆதரவினால் மேன் மேலும் வளர்ச்சி யடையுமாறு ஸ்ரீமஹா ஸந்நிதானத்தில் அனுக்ரஹிக்கிறார்கள்.

ஆக்ஞைப்படி

எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரி

மானேஜர்

3-4

## ஸ்ரீஆசார்யரவர்களின் அருள்வாக்கு: தேவீ

''தேவீ அம்பாள் யார்? ஔவை அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்று சொல்லி இருக்கிறாள்.

मातृदेवो भव । पितृदेवो भव ।

(தைத்திரியோபநிஷத்)

என்று உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன. மாதாவை தெய்வமாக வணங்கு, பிதாவை தெய்வமாக வணங்கு என்பது இதன் அர்த்தம். இந்த ஒரு ஜன்மத்துக்கு ஏற்பட்ட ஒரு தாயையே தெய்வமாகக்கொண்டாடவேண்டும். அம்பிகை எந்த ஜன்மத்துக்கும் மாதா. இந்த லோகத்தில் நாலைந்து குழந்தைகளுக்கு ஒருத்தி தாயாக இருக்கிறாள். எல்லாக் குழந்தைகளுக்கும் எல்லா காலத்துக்கும் தாயாக இருப்பவள் அம்பிகையே.

''லோகம் முழுவதற்கும் ஒரு தாயாக இருந்து அநுக்ரஹம் செய்யும் அம்பிகைக்கு பராசக்தி என்று ஒரு பெயர். அம்பிகையின் கடாக்ஷம் எப்படிப்பட்டவனையும் கை தூக்கி விடும். இது சாஸ்த்ரங்களின் கருத்து. அவளை பரதேவதை என்று வேதம் சொல்லுகிறது. அந்த அம்பிகையை நாம் அன்போடு தியானம் செய்ய வேண்டும். அபேதமாக நாம் வேறு அவள் வேறு என்பதின்றி ஒன்றாகவே தியானம் செய்யவேண்டும்

''ஆகையால் ஜகத்துக்குத் தாயாகவும், கருணையுடையவளாகவும் இருக்கும் அம்பாளை எல்லோரும் தியானம் பண்ணவேண்டும். எனக்கு முக்கியம் அம்பாள். அம்பாளுடைய சரணாரவிந்தத்தைத்தான் லோக க்ஷேமார்த்தம் தியானம் பண்ணிக்கொண்டிருக்கிறேன். எல்லோரும்

பண்ண வேண்டும். அம்பாளும் ஸ்வாமியும் சேர்ந்து அர்த்தநாரீச்வரராக இருக்கிறார்கள். லோக க்ஷேமார்த்தம் ஒரே பிரம்ம ஸ்வரூபம். பரமசிவனாகவும், மகாவிஷ்ணுவாகவும், பிரம்மாவாகவும் இருந்தாலும் இவை எல்லாம் ஒரே ஸ்வரூபம்.

"அம்பாளே பிரும்ம ரூபமாக, சிருஷ்டிகர்த்ரியாகவும், கோவிந்த ரூபிணியாக கோப்திரியாகவும், ருத்ரரூபமாக ஸம்ஹார ரூபிணியாகவும் விளங்குகிறாள் என்று லலிதா ஸஹஸ்ரநாமம் கூறுகிறது. அவள் ஒருத்திதான் இப்படியெல்லாம் விளையாடுகிறாள். இதைப் புரிந்துகொண்டு, அவளுடைய சரணாரவிந்தத் தியானம் பண்ணி நமது மதத்தை ரக்ஷிக்க வேண்டியது நமது கடமை."

---

# முன்னுரை

தேவி உபாஸனைக்கு ஸாதனையாயிருக்கும் நூல்களில் தேவீ மாஹாத்ம்யம் முக்கியமானது. இதை வடக்கே சண்டீ என்று அம்பாள் பெயராலேயே சொல்லுவர். 700 ச்லோகங்கள் இதில் அடங்கியிருப்பதால் 'துர்காஸப்தசதீ' என்றும் இதற்குப் பெயருண்டு. இதை பாராயணம் செய்வதோடு, இதைக்கொண்டு ஹோமம் செய்வதுமுண்டு.

இது மார்க்கண்டேய புராணத்தைச் சார்ந்ததாக பாராட்டப்படுகிறது. இது 13-வது அத்யாயங்களில், உலகிற்கு தீங்கை விளைவிக்கும் அசுரர்—மது-கைடபர், மஹிஷாஸுரன், தூம்ரலோசனன், சண்ட-முண்டர், ரக்தபீஜன், நிசும்ப-சும்பர் — இவர்களை தேவி, தேவர் வேண்டுகோளுக்கிணங்கி உலகத்தின் க்ஷேமத்திற்காகக் கொன்ற கதைகளை வர்ணிக்கிறது. ஒவ்வொரு அஸுரரும் கொல்லப்பட்டபோது தேவியை தேவர்கள் வணங்கிப் போற்றும் ஸ்தோத்ரங்கள் உள. இம்முழுநூலையும் நான் தமிழில் முன்னர் மொழி பெயர்த்துத் தந்திருக்கிறேன்.

இதிலுள்ள பல தேவீ ஸ்தோத்ரங்களுள் சிறந்தது நான்காம் அத்யாயத்தில் மஹிஷாஸுரன் விழுந்ததும் தேவியை இந்த்ரன் முதலிய தேவர்கள் துதிசெய்வது. அது இங்கே இத் தொடருக்கு ஏற்பட்ட முறைப்படி முதலில் ஸம்ஸ்க்ருத ச்லோகம், அதையே தமிழ் எழுத்தில் எழுதியது, பின் தமிழ் மொழி பெயர்ப்பு என்று எழுதித்தரப் பட்டிருக்கிறது.

தேவியை முக்யமாய் இந்த ஸ்தோத்திரத்தைக் கொண்டு வழிபட்டால் எல்லாப் பகைவரும் ஒழிந்து, வெற்றியைக் காணலாம்; இடையூறுகள் நீங்கி, காரியங்கள் கைகூடும்.

'அம்பாள் யார், அம்பாளை நாம் ஏன் வழிபடவேண்டும்' என்று நம் ஆசார்யரவர்களே விளக்கிய அருள்வாக்கு இந்த வெளியீட்டின் துவக்கத்தில் ஸ்ரீ முகத்துடன் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இதை எழுதுவதிலும் துணையாயிருந்த குமாரி ரா. ப்ரியம்வதாவிற்கு தேவீ எல்லா மங்களங்களையும் வழங்குவாளாக.

9-9-1966. வே. ரா.

॥ देवीमाहात्म्ये देवैः कृता

## महिषासुरमर्दिनीस्तुतिः ॥

देव्या यया ततमिदं जगदात्मशक्त्या
निश्शेषदेवगणशक्तिसमूहमूर्त्या ।
तामम्बिकामखिलदेवमहर्षिपूज्याम्
भक्त्या नताः स्म विदधातु शुभानि सा नः ॥ १ ॥

தே$_2$வ்யா யயா ததமித$_3$ம் ஜக$_3$தா$_3$த்மசக்த்யா
நிச்சேஷ தே$_3$வக$_3$ணசக்தி ஸமூஹ மூர்த்யா ।
தாமம்பி$_3$காமகி$_2$ல தே$_3$வ மஹர்ஷி பூஜ்யாம்
ப$_4$க்த்யா நதாஸ் ஸ்ம வித$_3$தா$_4$து சுபா$_4$நி ஸா ந: ॥ 1 ॥

எல்லாத் தேவதைகளுடைய ஒன்று சேர்ந்த சக்திகளின் குவியலையே தன்னுருவாகக் கொண்ட எந்தத் தேவியால் தன் சொந்தச் சக்தியாலேயே இந்த உலகம் இப்படிப் பரப்பப்பட்டிருக்கிறதோ, அந்த எல்லாத் தேவர்களாலும் மஹர்ஷிகளாலும் போற்றப்பட்ட அம்பிகையைப் பக்தியோடு வணங்குகிறோம்; அவள் நமக்கு நலன்களைப் பயக்கட்டும்

यस्याः प्रभावमतुलं भगवाननन्तो
ब्रह्मा हरश्च न हि वक्तुमलं बलं च ।
सा चण्डिकाखिलजगत्परिपालनाय
नाशाय चाशुभभयस्य मतिं करोतु ॥ २ ॥

யஸ்யா: ப்ரபா$_4$வ மதுலம் ப$_4$க$_3$வாந் அனந்தோ
ப்$_3$ரம்ஹா ஹரச்ச ந ஹி வக்துமலம்$_3$ பலம் ச |
ஸா சண்டி$_3$காகி$_2$ல ஜக$_3$த் பரிபாலனாய
நாசாய சாசுப$_4$ ப$_4$யஸ்ய மதிம் கரோது ॥ 2 ॥

எவளுடைய நிகரற்ற ப்ரபாவத்தையும் வலிமையையும் விஷ்ணு பகவானும், ப்ரம்மாவும், சிவனும்கூட சொல்வதற்கு சக்தியற்றவர்களோ, அந்த சண்டிகா தேவி உலகனைத்தையும் காப்பதற்கும் தீங்கின் பயத்தை ஒழிப்பதற்கும் எண்ணம் கொள்ளட்டும்.

या श्रीः स्वयं सुकृतिनां भवनेष्वलक्ष्मीः
पापात्मनां कृतधियां हृदयेषु बुद्धिः ।
श्रद्धा सतां कुलजनप्रभवस्य लज्जा
तां त्वां नताः स्म परिपालय देवि विश्वम् ॥ ३ ॥

யா ஸ்ரீ: ஸ்வயம் ஸுக்ருதினாம் ப4வனேஷ்வலக்ஷ்மீ:
பாபாத்மனாம் க்ருதத4யாம் ஹ்ருத3யேஷு பு3த்3தி4: |
ச்ரத்3தா4 ஸதாம் குலஜன ப்ரப4வஸ்ய லஜ்ஜா
தாம் த்வாம் நதா: ஸ்ம பரிபாலய தே3வி விச்வம் ॥ 3 ॥

எவள் நல்லது செய்தோர் அகங்களில் லக்ஷ்மியோ, தீங்கு புரிந்தோர் இல்லங்களில் தாரித்ரியமோ, எவள் பண்பட்ட புத்தியினரின் உள்ளத்தில் புத்தியோ, ஸாதுக்களின் ச்ரத்தையோ, நற்குடிப் பிறந்தோரின் லஜ்ஜையோ, அந்த உன்னை வணங்கினோம்; உலகைக் காப்பாற்று.

किं वर्णयाम तव रूपमचिन्त्यमेत-

त्किं चातिवीर्यमसुरक्षयकारि भूरि ।

किं चाहवेषु चरितानि तवाति यानि

सर्वेषु देव्यसुरदेवगणादिकेषु ॥ ४ ॥

கிம் வர்ணயாம தவ ரூபமசிந்த்யமேதத்

கிம் சாதிவீர்யம் அஸுரக்ஷயகாரி பூரி |

கிம் சாஹவேஷு சரிதானி தவாதியானி

ஸர்வேஷு தேவ்யஸுரதேவகணாதிகேஷு || 4 ||

தேவி! இந்த நினைக்கவொண்ணாத உன் ரூபத்தை வர்ணிப்போமா அஸுரரை ஒழிக்கும் இந்த ஏராளமான உன் பெரும் வீரத்தைத் தான் வர்ணிப்போமா? அஸுர தேவ கணங்கள் முதலியோருக்கிடையில் சண்டைகளில் மிகைப்பட்ட உன் செயல்களைத் தான் வர்ணிப்போமா?

हेतुः समस्तजगतां त्रिगुणापि दोषैः

न ज्ञायसे हरिहरादिभिरप्यपारा ।

सर्वाश्रयाखिलमिदं जगदंशभूत-

मव्याकृता हि परमा प्रकृतिस्त्वमाद्या ॥ ५ ॥

ஹேது: ஸமஸ்தஜக$_3$தாம் த்ரிகு$_3$ணாபி தோ$_3$ஷை:

ந ஜ்ஞாயஸே ஹரிஹராதி$_3$பி$_4$ ரப்யபாரா ।

ஸர்வாச்ரயாகி$_2$லமித$_3$ம் ஜக$_3$த$_3$ம்சபூ$_4$தம்

அவ்யாக்ருதா ஹி பரமா ப்ரக்ருதிஸ்த்வமாத்$_3$யா ॥ 5 ॥

நீ உலகனைத்திற்கும் மூல காரணம்; முக்குணங்களுள்ளவளாலும் அவற்றின் தோஷங்கள் உள்ளவளாகத் தென்படவில்லை; ஹரி, ஹரன் முதலியோருக்கும் எட்டாதவள்; எல்லாவற்றிற்கும் ஆச்ரயமானவள்; இவ்வுலகு உனக்கு ஓர் அம்சம்; நீ பகுக்கப்படாத முதலான மூலப்ரக்ருதி.

यस्याः समस्तसुरता समुदीरणेन
तृप्तिं प्रयाति सकलेषु मखेषु देवि ।
स्वाहासि वै पितृगणस्य च तृप्तिहेतु-
रुच्चार्यसे त्वमत एव जनैः स्वधा च ॥ ६ ॥

யஸ்யா: ஸமஸ்தஸுரதா ஸமுதீ3ரணேந
த்ருப்திம் ப்ரயாதி ஸகலேஷு மகே2ஷு தே3வி |
ஸ்வாஹாஸி வை பித்ருக3ணஸ்ய ச த்ருப்திஹேது:
உச்சார்யஸே த்வமத ஏவ ஜனை: ஸ்வதா4 ச || 6 ||

தேவி! எவளைச் சொன்ன மாத்திரத்தில் எல்லா யாகங்களிலும் எல்லாத் தேவ ஸமூஹமும் திருப்தியை அடைகிறதோ, அந்த ஸ்வாஹாவாய் நீ இருக்கிருய்; நீயே பித்ருகணங்களுக்கும் திருப்திக்குக் காரணமாதலால் 'ஸ்வதா' என்று ஜனங்கள் உன்னைத்தான் உச்சரிக்கின்றனர்.

या मुक्तिहेतुरविचिन्त्यमहाव्रता त्व-
मभ्यस्यसे सुनियतेंद्रियतत्वसारैः ।
मोक्षार्थिभिर्मुनिभिरस्तसमस्तदोषै-
र्विद्यासि सा भगवती परमा हि देवी ॥ ७ ॥

யா முக்திஹேதுரவிசிந்த்ய மஹாவ்ரதா த்வம்
அப்4யஸ்யஸே ஸுநியதேந்த்3ரிய தத்வஸாரை: |
மோக்ஷார்த்2பி4ர் முனிபி4ரஸ்த ஸமஸ்ததோ3ஷைர்
வித்3யாஸி ஸா ப4க3வதீ பரமா ஹி தே3வீ ॥ 7 ॥

எது முக்திக்குக் காரணமோ, நினைக்க முடியாத மஹா வ்ரதங்களின் அனுஷ்டானத்தோடு கூடியதோ, எது புலன்களை நன்கு அடக்கி பரப்ரம்ம தத்துவத்தையே ஸாரமாய்க் கருதி, எல்லா ராகத்வேஷாதி தோஷங்களையும் விலக்கி, மோக்ஷத்தையே தேடும் முனிவரால் பயிலப்படுகிறதோ, தேவியான நீயே அந்த ஸர்வ ச்ரேஷ்டமான மோக்ஷ வித்யையாக இருக்கிருய்.

शब्दात्मिका सुविमलर्ग्यजुषां निधान-

मुद्गीथरम्यपदपाठवतां च साम्नाम् ।

देवि त्रयी भगवती भवभावनाय

वार्तासि सर्वजगतां परमार्तिहंत्री ॥ ८ ॥

சப்₃தா₃த்மிகா ஸுவிமலர்க்₃ யஜுஷாம் நிதா₄னம்

உத்₃கீ₃த₂ ரம்ய பத₃ பாட₂வதாம் ச ஸாம்னும் |

தே₃வி த்ரயீ ப₄க₃வதீ ப₄வ பா₄வனய

வார்த்தாஸி ஸர்வஜக₃தாம் பரமார்திஹந்த்ரீ ॥ 8 ॥

தேவி! சப்தரூபமான நீயே மாசற்ற ரிக், யஜுஸ் ஸுக்களுக்கும் ப்ரணவ கானத்தால் அழகுபட்ட பத பாடங்களோடு கூடிய ஸாமங்களுக்கும் மூலமாகி வேத தேவதையாக இருக்கிருய்; உலகை நடத்துவதற்காக எல்லா ஜகத்துக்கும் ச்ரமத்தைப் போக்கும் படியான சிறந்த வார்த்தா என்ற வித்யையாகவும் இருக்கிருய்.

मेधासि देवि विदिताखिलशास्त्रसारा
दुर्गासि दुर्गभवसागरनौरसङ्गा ।
श्रीः कैटभारिहृदयैककृताधिवासा
गौरी त्वमेव शशिमौलिकृतप्रतिष्ठा ॥ ९ ॥

மேதா4ஸி தே3வி விதி3தாகி2ல சாஸ்த்ர ஸாரா
து3ர்கா3ஸி து3ர்க3 ப4வ ஸாக3ர நௌர் அஸங்கா3 |
ஸ்ரீ: கைடபா4ரி ஹ்ருத3யைக க்ருதாதி4 வாஸா
கௌ3ரீ த்வமேவ சசிமௌளிக்ருதப்ரதிஷ்டா2 ॥ 9 ॥

தேவி! எல்லாச் சாஸ்த்ரங்களின் ஸாரத்தை அறிந்த அறிவாக இருக்கிறாய் நீ; துர்க்கையான நீ தாண்டமுடியாத ஸம்ஸாரக் கடலைத் தாண்டவைக்கும் தடையில்லாப் போக்குடைய கப்பலாக இருக்கிறாய்; விஷ்ணுவின் மார்பிலேயே உறையும் லக்ஷ்மியாக இருக்கிறாய்; பரமசிவனிடத்திலேயே நிலை கொண்ட கௌரியாக இருப்பவளும் நீயே.

ईषत्सहासममलं परिपूर्णचन्द्र-

विम्बानुकारि कनकोत्तमकान्ति कान्तम् ।

अत्यद्भुतं प्रहृतमात्तरुषा तथापि

वक्त्रं विलोक्य सहसा महिषासुरेण ॥ १० ॥

ஈஷத் ஸஹாஸமமலம் பரிபூர்ண சந்த்3ர—

பி3ம்பா3நுகாரி கனகோத்தம காந்தி காந்தம் |

அத்யத்3பு4தம் ப்ரஹ்ருதமாத்தருஷா ததா2பி

வக்த்ரம் விலோக்ய ஸஹஸா மஹிஷாஸுரேண ॥ 10 ॥

புன்முறுவலோடு கூடியதும், தூயதும், நிறை மதியின் பிம்பத்தையொத்ததும், பொன்னின் மேன்மையான மேனியுடையதும், அழகானதுமான உன் முகத்தைப் பார்த்தும், சினங்கொண்டு மஹிஷாஸுரன் அடித்தனனே, ஆச்சரியம்!

11

दृष्ट्वा तु देवि कुपितं भ्रुकुटीकराल-

मुद्यच्छशाङ्कसदृशच्छवि यन्न सद्यः ।

प्राणान्मुमोच महिषस्तदतीव चित्रं

कैर्जीव्यते हि कुपितांतकदर्शनेन ॥ ११ ॥

த்3ருஷ்ட்வா து தே3வி குபிதம் ப்4ருகுடீகராளம்

உத்3யச்ச2சாங்க ஸத்3ருசச்2சவி யந்ந ஸத்3ய: ।

ப்ராணான் முமோச மஹிஷஸ்தத3தீவ சித்ரம்

கைர்ஜீவ்யதே ஹி குபிதாந்தகத3ர்சனேந ॥ 11 ॥

தேவி! சினங்கொண்டு, நெறித்த புருவத்தால் கடுமையானதும், உதயமாகும் சந்திரன் போல் சிவந்ததுமான அதே முகத்தைப் பார்த்ததும், உடனே அந்த மஹிஷாஸுரன் உயிரை விடாதது அதைவிட ஆச்சரியம்! கோபங்கொண்ட யமனையே பார்த்த எவனால்தான் பிழைத்திருக்க முடியும்?

देवि प्रसीद परमा भवती भवाय
सद्यो विनाशयसि कोपवती कुलानि ।
विज्ञातमेतदधुनैव यदस्तमेत-
न्नीतं बलं सुविपुलं महिषासुरस्य ॥ १२ ॥

தே$_3$வி ப்ரஸீத$_3$ பரமா ப$_4$வதீ ப$_4$வாய
ஸத்$_3$யோ விநாசயஸி கோபவதீ குலானி |
விஜ்ஞாதமேதத$_3$ து$_4$னைவ யத$_3$ஸ்தமேதத்
நீதம் ப$_3$லம் ஸுவிபுலம் மஹிஷாஸுரஸ்ய ॥ 12 ॥

தேவி! ஸர்வோத்கிருஷ்டையான நீ க்ஷேமத்தின் பொருட்டு அருள் செய்; நீ கோபங்கொண்டால் உடனே குலங்களைக் குலைக்கிறாய்; இது இப்போதே தெரிந்தது; ஏனெனில், மஹிஷாஸுரனின் இந்த மிகப் பெரிதான படை அழிக்கப்பட்டதே!

ते संमता जनपदेषु धनानि तेषां
तेषां यशांसि न च सीदति बंधुवर्गः ।
धन्यास्त एव निभृतात्मजभृत्यदारा
येषां सदाभ्युदयदा भवती प्रसन्ना ॥ १३ ॥

தே ஸம்மதா ஜனபதே$_{3}$ஷு த$_{4}$னானி தேஷாம்
தேஷாம் யசாம்ஸி ந ச ஸீத$_{3}$தி ப$_{3}$ந்து$_{4}$வர்க$_{3}$: ॥
த$_{4}$ந்யாஸ்த ஏவ நிப்$_{4}$ருதாத்மஜ ப்$_{4}$ருத்யதா$_{3}$ரா
யேஷாம் ஸதா$_{3}$zப்$_{4}$ யுத$_{3}$யதா$_{3}$ ப$_{4}$வதீ ப்ரஸன்னா ॥ 13 ॥

எவர்களுக்கு நீ ப்ரஸன்னையாக இருந்து எப்பொழுதும் நன்மையை அளித்துக்கொண்டிருக்கிறாயோ, அவர்களே நாட்டில் எல்லோருடைய மதிப்பையும் பெற்றவர்கள்; அவர்களுக்கே பொருள்களும் கீர்த்திகளும்; அவர்களுடைய உறவினர் கஷ்டப்பட மாட்டார்; அவர்களே பாக்யசாலிகள். அவர்களுக்கே அடங்கிய பிள்ளைகளும், பணியாட்களும் மனைவியரும்.

धर्म्याणि देवि सकलानि सदैव कर्मा-
ण्यत्यादृतः प्रतिदिनं सुकृती करोति ।
स्वर्गं प्रयाति च ततो भवतीप्रसादा-
ल्लोकत्रयेऽपि फलदा ननु देवि तेन ॥ १४ ॥

த4ர்ம்யாணி தே3வி ஸகலானி ஸதை3வ கர்மாண்-
யத்யாத்3ருத: ப்ரதிதி3னம் ஸுக்ருதீ கரோதி |
ஸ்வர்க3ம் ப்ரயாதி ச ததோ ப4வதீப்ரஸாதா3த்
லோகத்ரயேऽபி ப2லதா3 நநு தே3வி தேந ॥ 14 ॥

தேவி, உன் அருளால் பாக்யசாலியானவன் மிகவும் சிரத்தையாக எல்லாத் தர்மகாரியங்களையும் ஒவ்வொரு நாளும் செய்கிறான். அதன் மூலம் ஸ்வர்க்கம் அடைகிறான்; ஆகையால் மூவுலகிலும் நீயே பயனைக் கொடுப்பவளன்றோ?

दुर्गे स्मृता हरसि भीतिमशेषजन्तोः

स्वस्थैः स्मृता मतिमतीव शुभां ददासि ।

दारिद्यदुःखभयहारिणि का त्वदन्या

सर्वोपकारकरणाय सदार्द्रचित्ता ॥ १५ ॥

துர்கே ஸ்ம்ருதா ஹரஸி பீதிமசேஷ ஜந்தோ:
3 3 4

ஸ்வஸ்தை: ஸ்ரும்தா மதிமதீவ சுபாம் ததாஸி |
2 4 3 3

தாரித்ர்ய து:கபயஹாரிணி கா த்வதந்யா
2 3 3 2 4 3

ஸர்வோபகார கரணாய ஸதார்த்ர சித்தா ॥ 15 ॥
3 3

ஏ துர்கே! நினைத்த மாத்திரத்தில் எல்லா ஜந்துக்களுடைய பயத்தையும் விலக்குகிறாய்; ஸ்வஸ்தமாக இருப்பவர் நினைத்தால் மிகவும் நலன் பயக்கத்தக்கதான புத்தியை அவர்களுக்குக் கொடுக்கிறாய்; தாரித்ரியத்தின் துயரையும் பயத்தையும் போக்கும் தேவியே! உன்னைத்தவிர வேறு எவர் எல்லா உபகாரங்களும் செய்ய எப்பொழுதும் கனிந்த மனத்துடன் இருப்பர்?

एभिर्हतैर्जगदुपैति सुखं तथैते

कुर्वन्तु नाम नरकाय चिराय पापम् ।

संग्राममृत्युमधिगम्य दिवं प्रयान्तु

मत्वेति नूनमहितान्विनिहंसि देवि ॥ १६ ॥

ஏபி$_4$ர் ஹதைர் ஜக$_3$ து$_3$பைதி ஸுக$_2$ம் ததை$_2$தே

குர்வந்து நாம நரகாய சிராய பாபம் |

ஸங்$_3$க்ராம ம்ருத்யுமதி$_4$ க$_3$ம்ய தி$_3$வம் ப்ரயாந்து

மத்வேதி நூநமஹிதாந் விநிஹம்ஸி தே$_3$வி || 16 ||

இவர்களைக் கொன்றதால் உலகம் இன்பம் அடையட்டும்; இந்த அஸுரர் நரகம் செல்வதற்காக நெடுநாள் பாவத்தையே செய்துவரட்டும்; ஆனால் என்னிடம் சண்டையில் மரணத்தைப் பெற்று, ஸ்வர்க்கத்தை அடையட்டும்—இப்படி நினைத்தே ஏ தேவி! நீ சத்ருக்களைக் கொல்லுகிறாய் போலும்!

दृष्ट्वैव किं न भवती प्रकरोति भस्म
सर्वासुरानरिषु यत्प्रहिणोषि शस्त्रम् ।
लोकान्प्रयान्तु रिपवोऽपि हि शस्त्रपूता
इत्थं मतिर्भवति तेष्वहितेषु साध्वी ॥ १७ ॥

த்ருஷ்ட்வைவ கிம் ந பவதீ ப்ரகரோதி பஸ்ம
ஸர்வாஸுராந் அரிஷு யத் ப்ரஹிணோஷி சஸ்த்ரம் |
லோகாந் ப்ரயாந்து ரிபவோபி ஹி சஸ்த்ரபூதா
இத்தம் மதிர் பவதி தேஷ்வஹிதேஷு ஸாத்வீ ॥ 17 ॥

பார்த்த மாத்திரத்திலேயே நீ எல்லா அஸுரரையும் சாம்பலாகச் செய்யமாட்டாயா? ஆனால், நீ சத்ருக்கள் மேல் அஸ்த்ரத்தைப் போடுவது, 'என் சஸ்த்ரத்தால் பரிசுத்தராகிச் சத்ருக்களும் நல்ல லோகங்களை அடையட்டும்' என்று; இப்படி அந்தப் பகைவரிடமும் உனக்கு நல்ல புத்தி ஏற்படுகிறது.

खड्गप्रभानिकरविस्फुरणैस्तथोग्रैः

शूलाग्रकान्तिनिवहेन दृशोऽसुराणाम् ॥

यन्नागता विलयमंशुमदिंदुखंड-

योग्याननं तव विलोकयतां तदेतत् ॥ १८ ॥

க$_{2}$ட்$_{3}$க$_{3}$ப்ரபா$_{4}$நிகர விஸ்பு$_{2}$ரணைஸ்த$_{2}$தோக்$_{3}$ரை:

ஶூலாக்$_{3}$ரகாந்தி நிவஹேந த்$_{3}$ருசோ஽ஸுராணாம் |

யந்நாக$_{3}$தா விலயம் அம்சுமதி$_{3}$ந்து க$_{2}$ண்ட$_{3}$-

யோக்$_{3}$யாநநம் தவ விலோகயதாம் ததே$_{3}$தத் ‖ 18 ‖

வாளின் காந்திகள் உக்ரமாய் மின்னுவதாலேயும், சூலத்தின் நுனியின் காந்திகளாலும் அஸுரர்களின் கண்கள் அழிந்து போகவில்லை என்பது, கிரணங்களோடு கூடிய சந்த்ரகலையையுடைய உன் முகத்தை அவர்கள் பார்த்துக் கொண்டிருந்ததால் தான்.

दुर्वृत्तवृत्तशमनं तव देवि शीलं

रूपं तथैतदविचिन्त्यमतुल्यमन्यैः ।

वीर्यं च हंतृ हृतदेवपराक्रमाणां

वैरिष्वपि प्रकटितैव दया त्वयेत्थम् ॥ १९ ॥

து$_3$ர்வ்ருத்த வ்ருத்தசமனம் தவ தே$_3$வி சீலம்

ரூபம் ததை$_2$ தத$_3$விசிந்த்யம் அதுல்யம் அந்யை: |

வீர்யம் ச ஹந்த்ரு ஹ்ருததே$_3$வ பராக்ரமாணும்

வைரிஷ்வபி ப்ரகடிதைவ த$_3$யா த்வயேத்த$_2$ம் ॥ 19 ॥

தேவி, கெட்டவரின், கெட்ட நடத்தையை ஒழிப்பது உன் நடத்தை; வேறு எவரோடும் ஒப்பில்லாததும் நினைக்கவொண்ணாததுமானது உன் ரூபம்; தேவர் வீர்யத்தை வாங்கிய அஸுரரைக் கொன்றது உன் வீர்யம்; அப்படியிருந்தும் உன்னால் இந்த முறையில் பகைவரிடங்கூடத் தயையே காண்பிக்கப் பட்டது.

केनोपमा भवतु तेऽस्य पराक्रमस्य

रूपं च शत्रुभयकार्यतिहारि कुत्र ।

चित्ते कृपा समरनिष्ठुरता च दृष्टा

त्वय्येव देवि वरदे भुवनत्रयेऽपि ॥ २० ॥

கேனோபமா ப$_4$வது தேऽஸ்ய பராக்ரமஸ்ய

ரூபம் ச சத்ரு-ப$_4$யகார்யதிஹாரி குத்ர |

சித்தே க்ருபா ஸமரநிஷ்டு$_2$ரதா ச த்$_3$ருஷ்டா

த்வய்யேவ தே$_3$வி வரதே$_3$ பு$_4$வநத்ரயேऽபி ‖ 20 ‖

இந்த உன் பராக்ரமத்தை எத்துடன் ஒப்பிடுவது? இவ்வளவு அழகுள்ளதும் சத்ருக்களுக்கு அச்சம் அளிப்பதுமான ரூபந்தான் எங்கே? மனதில் கிருபையும் சண்டையில் கடுமையும், ஏ கேட்டதை அளிக்கும் தேவியே! இம் மூவுலகிலும் உன்னிடத்தில் தான் காணப்பட்டன.

त्रैलोक्यमेतदखिलं रिपुनाशनेन

त्रातं त्वया समरमूर्धनि तेऽपि हत्वा ।

नीता दिवं रिपुगणा भयमप्यपास्त-

मस्माकमुन्मदसुरारिभवं नमस्ते ॥ २१ ॥

த்ரைலோக்யமேதத$_3$ கி$_2$ லம் ரிபுநாசனேன

த்ராதம் த்வயா ஸமரமூர்த்$_3$த$_4$னி தே஽பி ஹத்வா |

நீதா தி$_3$வம் ரிபுக$_3$ணா ப$_4$ய மப்ய பாஸ்தம்

அஸ்மாகமுன்மத$_3$ ஸுராரிப$_4$வம் நமஸ்தே || 21 ||

சத்ருவை அழித்து இம்மூவுலகங்களும் முழுதும் காப்பாற்றப்பட்டன; சண்டையில் கொல்லப்பட்டுச் சத்ருக் கூட்டங்களும் ஸ்வர்க்கத்திற்குக் கொண்டு போகப்பட்டனர்: எங்களுக்குக் கர்வங் கொண்ட சத்ருக்களால் உண்டான பயமும் போக்கப்பட்டது; உன்னை வணங்குகிறோம்.

शूलेन पाहि नो देवि पाहि खड्गेन चाम्बिके ।
घण्टास्वनेन नः पाहि चापज्यानिःस्वनेन च ॥ २२ ॥

சூலேன பாஹி நோ தேவி பாஹி கட்கேந சாம்பிகே |
கண்டாஸ்வநேந ந: பாஹி சாபஜ்யாநி: ஸ்வநேந ச ‖ 22 ‖

தேவி! சூலத்தால் எங்களைக் காப்பாற்று; அம்பிகே! வாளால் எங்களைக் காப்பாற்று; மணியோசையாலும், வில்லின் நாணொலியாலும் எங்களைக் காப்பாற்று.

चक्रेण पाहि नो देवि शंखेन च पुनीहि नः ।
गदया ताडयास्माकमरीन्मर्दय मारय ॥ २३ ॥

சக்ரேண பாஹி நோ தேவி சங்கேந ச புனீஹி ந: |
கதயா தாடயாஸ்மாகம் அரீன் மர்தய மாரய ‖ 23 ‖

தேவி! சக்ரத்தால் எம்மைக் காப்பாற்று, சங்கத்தால் எம்மை (காப்பாற்று) பரிசுத்தம் செய்; கதையால் எம் சத்ருக்களை அடி நசுக்கு கொல்லு.

प्राच्यां रक्ष प्रतीच्यां च चण्डिके रक्ष दक्षिणे ।
भ्रामणेनात्मशूलस्य उत्तरस्यां तथेश्वरि ॥ २४ ॥

ப்ராச்யாம் ரக்ஷ ப்ரதீச்யாம் ச சண்டிகே ரக்ஷ தக்ஷிணே ।
ப் ராமணேனாத்ம-சூலஸ்ய உத்தரஸ்யாம் ததேச்வரி ! ॥ 24 ॥

சண்டிகே, உன் சூலத்தை வீசி கிழக்கே ரக்ஷி, மேற்கே ரக்ஷி, தெற்கே ரக்ஷி, ஏ ஈச்வரி, வடக்கே ரக்ஷி.

सौम्यानि यानि रूपाणि त्रैलोक्ये विचरंति ते ।
यानि चात्यन्तघोराणि तै रक्षास्मांस्तथा भुवम् ॥ २५ ॥

ஸௌம்யாநி யாநி ரூபாணி
த்ரைலோக்யே விசரந்தி தே ।
யாநி சாத்யந்த-கோராணி
தை ரக்ஷாஸ்மான் ததா புவம் ॥ 25 ॥

இம்மூன்று உலகங்களிலும் உன்னுடைய மிருதுவான தோற்றங்கள் எவை உலவுகின்றனவோ, மிகவும் கடுமையான தோற்றங்கள் எவை உலவுகின்றனவோ, அவை எல்லாவற்றாலும் எம்மையும் இவ்வுலகையும் காப்பாற்று.

खड्गशूलगदादीनि यानि चास्त्राणि तेऽम्बिके ।

करपल्लवसंगीनि तैरस्मान् रक्ष सर्वतः ॥ २६ ॥

கட்க சூல கதாதீநி யாநி சாஸ்த்ராணி தேऽம்பிகே |

கர பல்லவ ஸங்கீநி தைரஸ்மாந் ரக்ஷ ஸர்வத: ॥ 26 ॥

தளிர் போன்ற உன் கையில் இருக்கும் வாள், சூலம், கதை முதலிய அஸ்த்ரங்களால், ஏ அம்பிகே! எங்களை எங்கும் ரக்ஷி.



---